

# உண்டியல் காசு

டோரி சாகோனஸ்

தமிழில் கிருஷ்ணன்

*“போருக்கு அப்பா சென்ற நாள் நான் அழுது கொண்டே இருந்தேன்.*
*அப்பா என்னை கட்டி அணைத்து தைரியமாக இருக்க சொன்னார்*
*ஆனால் எனக்கு நிறைய பயங்கள் இருந்தன.”*

ஒரு சிறுவன் தினமும் தன் வீட்டின் படிக்கட்டில் உட்கார்ந்து போகும் பெரிய குதிரைகளை வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பான். அவற்றின் பெரிய உருவங்களை பார்த்து பயந்து ஒதுங்கி இருந்தான். அவனுடைய அப்பாவை போன்று தைரியமாக இருக்க முடியவில்லையே என்று வெட்கப்பட்டான் . எவ்வளவு மனதை தேற்றினாலும் அவனுக்கு அந்த குதிரைகளை நெருங்கி போவதற்கு பயமாகவே இருந்தது.

அப்பாவுக்கு ஒரு சிறந்த பரிசை அனுப்புவதற்கு நினைத்த அந்த சிறுவன் ஒரு குட்டி குதிரையின் மேல் சவாரி செய்து அதை ஒரு போட்டோவும் பிடித்து அனுப்பினான். இப்படி ஒரு வழியாக குதிரை மீது தனக்கு இருந்த பயத்தை தாண்டி அப்பாவை பெருமை படுத்த கூடிய இளைஞனாக மாறினான்.

பாசம், பயம், தியாகம் என்று எல்லா உணர்வுகளையும் கலந்து சுவாரசியமாக இந்த கதையை டோரி சாகோனஸ் எழுதியிருக்கிறார். இரண்டாம் உலக போரின் போது சமூகத்தில் இருந்த பதற்றம், பிரிவுகள் அதனால் வரும் வருத்தம் இவற்றை அழகாக இந்த கதை தொட்டு செல்கிறது. இது வரும் சந்ததியினருக்கு மனதை தொடும் கதையாக இருக்கும்.





போருக்கு அப்பா சென்ற நாள் நான் அழுது கொண்டே இருந்தேன். அப்பா என்னை கட்டி அணைத்து தைரியமாக இருக்க சொன்னார் ஆனால் எனக்கு நிறைய பயங்கள் இருந்தன.
அப்பா இல்லாமல் எப்படி அம்மாவும் நானும் தனியாக சமாளிக்க போகிறோம். போர் விமானங்கள் காது கிழிய வீட்டின் மேல் பறந்து செல்லும் போது, வெடி குண்டுகளையும், துப்பாக்கி சூட்டையும் எதிர்கொள்ளப் போகும் அப்பாவை நினைத்தும் நிறைய பயங்கள் இருந்தன.
இந்த போர் நேரத்தில் எப்படி ஒவ்வொரு நாளையும் கழிக்க போகிறோம் என்று எல்லாவற்றையும் விட குதிரைகள் சத்தத்தை கேட்டால் இன்னும் பயமாக இருந்தது.
அப்பா இருக்கும் போது நானும் அவரும் வாசல் படிக்கட்டில் உட்கார்ந்து இருப்போம். இப்போது நான் மட்டும் உட்கார்ந்து என் பச்சை கண்ணாடி உண்டியலில் உள்ள காசை எண்ணி கொண்டிருக்கிறேன். அப்பாவுடைய பிறந்தநாள் வருகிறது. அவருக்கு நான் சேமித்து வைத்திருக்கும் காசை கொண்டு ஏதாவது பரிசு வாங்க வேண்டும். அது தனித்துவமாக இருக்க வேண்டும்.
அம்மாவும் அப்பாவின் பிறந்தநாள் பரிசாக சாக்ஸ் ஒன்றை தைத்துக் கொண்டிருக்கிறார்.
எங்கள்இருவரின்பரிசுகளையும்  அப்பாவுக்கு தபால் செய்ய போவதாக கூறினார்.

பேப்பர் சேகரித்து கொண்டு செல்பவரின் சத்தம் கேட்டது. நான் வீட்டிற்குள் ஓடி சென்று இதுவரை சேர்ந்து கிடக்கும் நியூஸ் பேப்பர்களை திரட்டி கொண்டு வந்து வாசலில் போட்டேன். அந்த பேப்பர் சேகரிக்கும் வண்டியை ஜோசஃபினா எனும் குதிரை தான் இழுத்து வந்தது. அந்த குதிரை வண்டியின் சொந்தக்காரர் ஒரு மரப் பலகையில் அமர்ந்து வந்தார். “பேப்பர்!” க்ளக் க்ளக் க்ளக் நியூஸ் பேப்பர்! “பேப்பர்!” க்ளக் க்ளக் க்ளக் க்ளிக் க்ளிக் ! என்று சத்தம் இட்டார் என்னுடைய பேப்பர் மூட்டையை பார்த்தவுடனே. ஒரு கனமான வட்டமான இரும்பு வில்லை தரையில் குதிரையின் முன் போட்டார். தொங்க்.... என்று சத்தம் கேட்டது. குதிரை தாண்டி செல்லாமல் இருப்பதற்கு அதை செய்தார். நங்கூரம் போல அந்த இரும்பு வட்ட வில்லும், கப்பல் போன்று குதிரையும் இருந்தது என கூறலாம்.





குதிரையின் வாசம் என் மூக்கை துளைத்தது. ஜோசஃபினா தன் கழுத்தை சுற்றி- வளைத்து என்னை நேராக பார்த்தது. அதனுடைய பற்கள் பியானோவின் விசைகள் போன்று இருந்தது.
நான் பயத்தில் பின்னாடி சென்றேன். இந்த குதிரை யாரையாவது கடித்திருக்குமா? என்று என் மனதில் கேள்வி எழுந்தது.
அப்பா இளம் வயதில் ஒருமுறை குதிரையிடம் கடி வாங்கியிருக்கிறார். ஒரு இளம்பிறை போல வடு இன்னும் அவரது தோளில் இருக்கிறது.
“குதிரைகளும் மனிதர்களை போன்று தான்” என்று அப்பா அடிக்கடி கூறுவார். “ஒரு சில நேரங்களில் கெட்ட குணம் கொண்ட குதிரைகளை நாம் காண நேரிடும் ஆனால் பெரும்பான்மையானவை நல்லவைகளே” என்பார் அப்பா.
பேப்பர்காரர் என்னுடைய பேப்பர் மூட்டையை தூக்கி குதிரை வண்டியின் பின்னெறிருந்தார்.
“ஏதாவது இரும்பு இருக்கிறதா. போருக்கு கப்பல் செய்ய, ஏரோபிளான்கள் செய்ய நிறைய இரும்பு தேவையாம்” என்றார் பேப்பர்காரர். “நம்மால் முடிந்ததை செய்ய வேண்டும்” என்றார்.

என் வீட்டிலிருக்கும் இருக்கும் குதிரை லாடத்தை கொடுக்கலாமா என்று நினைத்தேன். அப்பா அதை சுவரில் “ஆங்கில எழுத்து U வடிவத்தில்” மாட்டி வைத்திருந்தார். அப்படி மாட்டி வைத்தால் அது நல்ல அதிர்ஷ்டம் கொண்டு வரும். மாற்றாக அதை தலைகீழாக மாட்டினால் அந்த அதிர்ஷ்டம் தலைகீழாக மாறி போகும்” என்பார் அப்பா.

அப்பா போருக்கு சென்றிருக்கும் இந்த சமயத்தில் எந்த கெட்ட நிகழ்வும் நடந்து விடக்கூடாது என்பதில் கவனமாக இருக்க வேண்டும் என்று மனதில் சொல்லி கொண்டேன் .

“நியூஸ்பேப்பர் மட்டும் தான்” என்றேன் நான் பேப்பர் காரரிடம். என் கண்கள் குதிரையின் மேலேயே இருந்தது. குதிரையும் போலாம் என்று சொல்வது போல சத்தமாக கனைத்தது.

“குதிரைக்கு ஒரு கேரட் கொடுக்கிறாயா?” என்று பேப்பர் காரர் என்னை கேட்டார்.





“நான் ஒரு அடி பின்னால் எடுத்து வைத்து வேண்டாம்” என்று தலையசைத்தேன் “இன்று இல்லை” என்று சொன்னேன்
பேப்பர் காரரும் “சரி அடுத்த முறை” என்று சொன்னார். நான் திரும்ப படிக்கட்டில் போய் அமர்ந்தேன். சில்லறை காசுகளை எண்ணினேன். பிறகு அதை உண்டியலில் திரும்ப போட்டுவிட்டேன். ப்ளீக்! ப்ளீக்! ப்ளீக்! ஐம்பத்து ஆறு சென்ட்!

செவ்வாய், வெள்ளி கிழமை பால் கிடைக்கும் நாட்கள். மிஸ்டர் லாசி  தான் எங்களின் பால்காரர். அவரது குதிரையின் பெயர் நெல். “குட் மோர்னிங்” என்று மிஸ்டர் லாசி அழைத்தார். குதிரையும் வீட்டின் முன்னால் வந்து நின்றது.
மூன்று பால் பாட்டில்களை லாசி வீட்டின் முன் அடுக்கி வைத்தார். காலி பாட்டில்களை கம்பி கூடையில் எடுத்து போட்டு கொண்டார்.
“மிஸ்டர் லாசி நான் வேண்டுமானால் இந்த கூடையை வண்டியில் கொண்டுவந்து வைக்கட்டுமா” என்றேன்.
சிங்க்.. சிங்க்.. சிங்க்..  என்று சத்தம் இட்டு கொண்டே கூடையும், பாட்டிலும் என் காலில் உரசியது.
குதிரை நெல் மிஸ்டர் லாசியை பார்த்தவுடன் மகிழ்ச்சியில் தலையை மேலும் கீழுமாக ஆட்டியது. கால்களை தரையில் மிதித்தது.





குதிரையின் பக்கம்
போனவுடனேயே நான் சற்று
பின்வாங்கி நின்றேன்
“என் அப்பா குதிரைக்கு பயப்பட
மாட்டார், அவர் விவசாய
குடும்பத்தில் வளர்ந்தவர்” என்று
நான் கூறினேன்.
என்னை சிரித்து கொண்டே
பார்த்தார் மிஸ்டர் லாசி.
பின்னர் அவரிடம் இருந்த ஒரு
ரூபாயை எனக்கு தந்தார்.
பாட்டில்களை கொண்டு வந்து
கொடுத்ததற்கு.
குதிரை அடுத்த வீட்டிற்கு
நடையை போட்டது.

அப்பாவை ஒரு முறை குதிரை
கடித்த பிறகு அதன் பக்கம்
போவதையே முற்றிலும்
தவிர்த்தார். ஆனால் தாத்தாவிற்கு
பண்ணையில் வேலைக்கு உதவ
வேண்டியிருக்கும் போது
குதிரைகளிடம் போக வேண்டிய
அவசியம் தவிர்க்க முடியாததாக
இருந்தது.

“சில விஷயங்கள் நமக்கு
பிடிக்காமல் இருந்தாலும், கடமை
என்று வந்து விட்டால் அதை நாம்
செய்து தான் ஆக வேண்டும்”
என்பார் அப்பா.

ஒவ்வொரு வாரமும்  குப்பை வண்டி வீட்டிலுள்ள குப்பைகளை எடுத்து செல்ல வரும். அதை இழுத்து கொண்டுவரும் குதிரைகளின் பெயர் பில்லி, பையிலி ஊரில் இருப்பதிலேயே பெரிய குதிரைகள் இவைகள் தான். இந்த குதிரையின் கால்கள் இரும்பு போன்றவை.
ஏய்! என்று கூறி ஆல்பர்ட் குதிரைகளை இழுத்து நிக்க வைத்தார். இரண்டு பேர் குப்பைகளை அள்ளி போடுவதற்கு  இறங்கி வந்தனர். அவர்கள் குப்பைகளை  அள்ளி வண்டியில் கொட்டினார்கள்.
“என் அப்பா இருந்தார் என்றால் இந்த வண்டியை எளிதாக ஓட்டி விடுவார். என் தாத்தா வின்  வைக்கோல் வண்டியை அப்பா தான் ஒட்டி வருவார். சில சமயங்களில் நான் பின்னே உக்கார்ந்து வருவேன்”   என்றேன் நான் அல்பெர்ட்டிடம் .
“பின்னாடி ஏறி சவாரி செய்கிறாயா?” என்றார் ஆல்பர்ட் சிரித்து கொண்டே .





“நான் இல்லை” என்று தலையை ஆட்டினேன்
கோடையில் வெயில் அடிக்கும் நாட்களில் கூட குப்பை வண்டியில் இருந்து துர்நாற்றம் வந்தது.
“பரவாயில்லை இப்போது வேண்டாம்” என்று நான் கூறினேன்.
பில்லியும் , பையிலியும் மண்டையை ஆட்டின. அவை மேல் இருக்கும் கடிவாளங்களும் சேர்ந்து குலுங்கின. நானும் வீட்டு படிக்கட்டிற்கு குதித்து ஓடி விட்டேன். குப்பை வண்டி போனவுடனே தான் எனக்கும் மனம் அமைதியானது.

அன்று மதியம் படிக்கட்டில் உட்கார்ந்து கொண்டு அப்பாவுக்கு கடிதம் எழுதினேன் “அப்பா வீட்டுக்கு சீக்கிரம் வாங்க. நீங்க இங்க இருந்தா…” என்று எழுத ஆரம்பித்தேன்.
என் கண்ணை மூடி கொண்டு யோசித்தால் ஆயிரம் விஷயங்கள் அப்பாவிடம் சொல்வதற்கு இருந்தது. எல்லாவற்றையும் இந்த ஒரே கடிதத்தில் எப்படி எழுத முடியும்?
திடீரென்று ஏதோ கனைக்கும் சத்தம் கேட்டது. என் வீட்டு எதிரில் நடைபாதையில் ஒருவர் ஒரு குட்டி குதிரையுடன் நின்று கொண்டிருந்தார். குதிரையின் மேல் உட்கார வசதியாக ஒரு இருக்கையும் இருந்தது. அதன் சருமத்தில் இருக்கும் முடியும் வாலும் வெயிலில் மின்னி கொண்டிருந்தன.
“ஏய் தம்பி இந்த குட்டி குதிரையின் மேல் சவாரி செய்கிறாயா? “ என்று அந்த மனிதர் கேட்டார்.





“நானா” என்று கேட்டேன்
ஒரு பெரிய கேமரா அவரது கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. உன்னை குதிரையில் உட்கார வைத்து படம் எடுக்கிறேன் என்று கூறினார் அந்த மனிதர். “வெறும் 50 சென்ட் தான்” என்று சொன்னார்.
எனக்கு குதிரை என்றால் பயம் என்று அவரிடம் கூற விருப்பமில்லை.
“இந்த குட்டி குதிரையின் பெயர் என்ன?” என்று நான் கேட்டேன்.
அவன் பெயர் “சுதந்திரம்” என்றார் அந்த மனிதர்.
சுதந்திரம்” என்று மனதில் சொல்லி கொண்டேன். நம் நாடு சுதந்திரத்துக்காக தானே அப்பா சண்டையிட போருக்கு போயிருக்கிறார். அவருக்கு இந்த பெயர் பிடித்து போகும் என்று நினைத்து கொண்டேன்
“அப்பா இங்கு இருந்தார் என்றால்” என்று பேச ஆரம்பித்தேன் ஆனால் அப்பா தான் இல்லையே என்று என் மனது கூறியது.
“இல்லை  வேண்டாம்” என்று அந்த மனிதரிடம்  கூறினேன்.

அந்த மனிதரும் குட்டி குதிரையும் நடந்து போவதை பார்த்து என் மனது சோர்வடைந்து போனது. அப்பா நான் இப்படி இருப்பதை பார்த்தால் என்ன நினைப்பார்?

“சில விஷயங்கள் நமக்கு பிடிக்காமல் இருந்தாலும், கடமை என்று வந்து விட்டால் அதை நாம் செய்து தான் ஆக வேண்டும்” என்று அப்பா சொல்வது நினைவுக்கு வந்தது. என்ன பரிசு அப்பாவுக்கு அனுப்ப வேண்டும் என்ற யோசனையும் அப்போது தான் வந்தது. அந்த பரிசு அப்பாவை சந்தோஷப்படுத்த வேண்டும்.

ஹலோ மிஸ்டர்! ஹலோ மிஸ்டர்! என்று நான் அந்த போட்டோகிராபரை அழைத்தேன்.
நான் அவரை நோக்கி ஓடி சென்றேன்.
வேகமாக ஓடியதில் மூச்சு இறைத்தது.
“எனக்கு சுதந்திரத்தோடு ஒரு படம் எடுக்க வேண்டும்.” என்றேன்.

போட்டோக்ராபர் நின்று அவருடைய கேன்வாஸ் பையை திறந்தார். அதிலிருந்து ஒரு லெதர் ஜாக்கெட் ஒன்றை எடுத்து எனக்கு அணிவித்தார். அது என் தோளில் கனமாக இருப்பதை நான் உணர்ந்தேன். அதன் பிறகு ஒரு கவ்பாய் (cowboy) தொப்பியை என் தலையில் மாட்டி விட்டார்.
என் கால்கள் நடுங்கின. ஆனாலும் தைரியமாக இருந்தேன்.





என்னை குதிரையின் மேல் இருக்கும் இருக்கையில் அமர செய்தார் அந்த  போட்டோக்ராபர். அந்த இருக்கை வழுக்குவதை போலவே உணர்ந்தேன். என் இதயம் படபடவென அடித்தது. “நான் குதிரையிலிருந்து விழ போகிறேன்.” என்று என் மனம் பதறியது.
“முட்டியை அணைத்து குதிரையோடு வைத்து கொள் தம்பி” என்றார் அந்த போட்டோக்ராபர். நான் கெட்டியமாக அணைத்து கொண்டேன். மெதுவாக குதிரையை என் வீட்டை நோக்கி நடக்க செய்தார். குதிரை மேல் இரண்டு பக்கமும் மெல்ல ஆடி கொண்டே வந்தேன். ஆனால் நான் விழவில்லை.
என்னால் நம்ப முடியவில்லை நான் குதிரை ஒன்றை ஓட்டிக்கொண்டு வருகிறேன். எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அது ஒரு குதிரை தான். நானும் குதிரையும் வீட்டை நெருங்க அம்மா வெளியே வந்தார்.
“பாரு ஆமாம் நான் குதிரை சவாரி செய்கிறேன்” என்று நான் கத்தினேன். பிறகு என்னை அறியாமலேயே சத்தமாக சிரித்தேன்.
“சரி இப்போ உன்னை சிரிக்க வைக்க வேண்டிய வேலை எனக்கு இல்லை” என்று கூறினார் காமெராவுக்கு பின் இருந்த போட்டோக்ராபர்.

க்ளிக்!
படம் எடுத்த பின் போட்டோக்ராபர் என்னை இறக்கி விட்டார். நான் குட்டி குதிரையை தட்டி கொடுத்தேன். என் கண்ணாடி உண்டியலலிருந்த 50 சென்ட்டை எண்ணி பார்த்தேன்.
ஒரு அழகான போட்டோ உனக்கு கிடைக்க போகிறது என்றார் போட்டோக்ராபர்.



முற்றும்